[28th March 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : தொழிற்சாலைகளில் வேலை செய்கின்ற தொழிலாளர்களுடைய சௌகரியத்திற்காக சங்கு ஊதுகிறுர்கள். அதை ஊர் முழுவதிற்கும் ஊதுமாறு கேட்டுக்கொள்வது சரியல்ல. அதற்கு முயற்சி செய்வதிலும் பயன் இல்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : சில இடங்களில் அதாவது நகரசபைகளில் இந்த ஒலி எழுப்புவதின் காரணமாக, பக்கத்தில் இருக்கக்கூடிய ஆசுபத்திரிகளில் இருக்கக்கூடிய நோயாளிகளுக்கு (பேஷிண்ட்) தொந்தரவு ஏற்படுகிறது என்று சொல்வதை நான் கேள்விபட்டிருக்கிறேன். ஆகவே மைசூர் போன்ற இடங்களில் ஏற்பாடு செய்திருப்பது போன்று அரை செக்கன்ட், அல்லது ஒரு செக்கன்ட் (லைட்டை) விளக்கை அணைத்து ஏற்றுவது என்கிற முறையை ஏற்படுத்த முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றியும் யோசனை செய்து பார்க்கலாம். ஆனல் "வீக்"-காக இருக்கும் பல்புகள், இதனல் ப்யூஸாகி விடும். எல்லாவற்றையும் யோசித்துப்பார்க்கலாம்.

SRI A. A. RASHEED : கடியாரம் பார்க்கத் தெரியாத ஆள்களின் நன்மையைக் கருதியாவது இந்த "டைம்-கன்" முறையை சர்க்கார் ஏற்படுத்துமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கடிகாரம் பார்க்கத் தெரியாதவர்களுக்கு இதன் மூலமும் நேரத்தை அறிந்துகொள்ள முடியாது.

SRI A. VEDARATHNAM : நம்முடைய கிராமங்களில் படிக்கத் தெரிந்தவர்களை விட படிக்கத் தெரியாதவர்கள்தான் அதிகமாக இருக்கிறுர்கள். அவர்கள் சரியான நேரத்தில் வேலைக்குப் போகக்கூடிய அளவில், நேரத்தை குறிப்பிடுவதற்கு ஏதாவது அறிகுறி ஏற்படுத்தப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நாம் சென்னை நகரத்தைப் பற்றி பேசிக்கொண்டிருக்கிறேம். கிராமங்களைப்பற்றி அல்ல.

*Beggar problem*

*** 1148 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பிச்சைக்காரர்கள் ஆண்டுக்கு ஆண்டு அதிகரித்து வருவது உண்மையா ?

(இ) அப்படியானல் அதற்கான காரணங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No year-wise census is taken to find out the number of beggars in this State.

(*b*) Does not arise.

*Bug nuisance*

*** 1149 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மலேரியா ஒழிப்புக்கு D.D.T. அடித்ததின் காரணமாக மூட்டைப் பூச்சிகள் அதிகமாயுள்ளது என்பது உண்மையா ?

(இ) அப்படியானல் அதைப்போக்க சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.